கழக வெளியீடு: ௮௱

# தொல்காப்பியம்

# எழுத்ததிகாரம்

[illegible]. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.



## இளம்பூரணர்

உரையுடன்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி :: சென்னை-1.

First Edition: October, 1955.
Reprint: November, 1958..

THOLKAPPIYAM-ELUTHTHATHIKARAM-ILAMBOORANAM



*Published by*

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS
PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,
1/140, BROADWAY, MADRAS-1

*Head Office.*

98, EAST CAR STREET, TIRUNELVELI

Appar Achakam, 2/140, Broadway, Madras-1.—C. 2100.

# பதிப்புரை

ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியத் தமிழ் முனிவரனார் செய்தருளிய தமிழ்த் தொன்மை முழுமுதல் நூல் தொல்காப்பியமாகும். அது மொழியமைதிக் கருவிநூலாகிய இலக்கணத்தோடுமட்டும் அமையாது உலக வரலாற்று நூல், ஒழுகலாற்று நூல், பண்பாட்டு நூல், தெய்வந்தெளிநூல், உளவியல்பு நூல் முதலிய பல நூலின் பயனார் கருத்துக்களடங்கிய பொருளதிகாரத்தைத் தன்னகத்துக்கொண்டுள்ள வாழ்க்கைப் பெருநூலாகவும் திகழ்கின்றது.

இஃது எழுத்து, சொல், பொருள் என்னும் மூன்று பகுதிகளையுடையது ஒவ்வொன்றும் ஒன்பதொன்பது இயல்களையுடையன. மொத்தம் ஆயிரத்து அறுநூற்றுப்பத்துச் சூத்திரங்கள் உள்ளன. தொல்காப்பியம் முழுமைக்கும் முதன் முதல் உரைகண்ட நல்லிசைச் சான்றோர் இளம்பூரண அடிகளாராவர். இறுதியில் முழுமைக்கும் உரைகண்டவர் ஆசிரியர் நச்சினார்க்கினியராவர். பேராசிரியர் ஒருவரும் இவ்வாறே நூன்முழுமைக்கும் உரைகண்டனரென்ப. இப்பொழுது வெளிவந்துள்ள பேராசிரியர் உரை பொருளதிகாரத்துள் 'மெய்ப்பாட்டியல், உவமவியல், செய்யுளியல், மரபியல்' என்னும் இறுதிப் பகுதி நான்கற்குமட்டுமே காணப்படுகின்றன.

சொல்லதிகாரத்துக்குச் சேனாவரையர், கல்லாடர், தெய்வச்சிலையார் என்னும் மூவரும் தனித்தனி உரை வரைந்துள்ளனர். அவற்றுள் சேனாவரையர் உரையே சிறந்தோங்கி எல்லாராலும் மிக்குப் பயிலப்படுகின்றது. தெய்வச்சிலையார் உரையும் வெளிவந்துள்ளது.

தொல்காப்பிய முழுமையையும் அரிதின் முயன்று யாழ்ப்பாணம் திரு. சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள் கி. பி. 1892-இல் வெளியிட்டனர். பின் பவானந்தம் பிள்ளையவர்கள் தொல்காப்பியப் பொருளதிகாரத்தை உரையுடன் வெளியிட்டனர். இதுபோல் 1934-இல் திரிசிரபுரம் S. கனகசபாபதி பிள்ளையவர்கள் வெளியிட்டனர். 1927-இல் காவேரிப்பாக்கம் திரு. நமச்சிவாய முதலியாரவர்கள் தொல்காப்பியம் சொல்லதிகாரம் இளம்பூரணம் வெளியிட்டுள்ளனர். யாழ்ப்பாணம் தமிழ் வித்துவான் புன்னாலைக்கட்டுவன், பிரம்மஸ்ரீ சி. கணேசையர் அவர்கள் உரை விளக்கக்குறிப்புக்களுடன் 1937-இல் தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியமும், 1938-இல் அது

போன்று சொல்லதிகாரம் சேனாவரையமும், 1943-இல் அது போன்றே பொருளதிகாரம் பின் நான்கியல்களுக்குப் பேராசிரியமும், 1948-இல் அதுபோன்றே பொருளதிகாரம் முன் ஐந்தியல்களுக்கு நச்சினார்க்கினியமும் வெளிவந்துள்ளன.

நம் கழகத்துவழித் தொல். எழுத்து நச்சினார்க்கினியமும், சொல் சேனாவரையமும் அரிய பெரிய ஆராய்ச்சிப் பல்வகைக் குறிப்புக்களுடன் வெளிவந்துள்ளன. பின் தொல், பொருளதிகாரம் இளம்பூரணவடிகள் உரையுடன் வெளிவந்துள்ளது. இப்பொழுது எழுத்ததிகாரம் இளம்பூரணர் உரையுடன் வெளிவருகின்றது. இவ்வுரையோடு ஏறத்தாழ எண்பத்தேழு ஆண்டுகளுக்குமுன் (1868) பூவிருந்தவல்லி, திரு. சு. கன்னியப்ப முதலியாரவர்கள் வெளியிட்டுள்ளார்கள். அதன்கண் உரை, பொழிப்புரையாகக் காணப்படுகின்றது. பின் 1941-இல் திரு. வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்கள் இப்பொழிப்புரையைத் தழுவிப் பதவுரையாக்கி வெளியிட்டுள்ளார்கள்.

இப்பொழுது கழகத்துவழி இது வெளிவருகின்றது. இதனைக் கற்பாரும் கற்பிப்பாரும் தெளிவோடுணர்தற்பொருட்டு இளம்பூரண அடிகளுடன் நச்சினார்க்கினியர் மாறுபடுவது, மிக்க விளக்கந்தருவது ஆகிய பகுதிகளை அவ்வச் சூத்திரங்களின் அடிக்குறிப்பிலமைத்தும், புலவர், ஞா. தேவநேயப் பாவாணர் அவர்கள் (எம் ஏ) இருவர் உரைக்கும் தரும் விளக்கங்களையும், தம் மதிநுட்பத்தால் கண்ட புதுக்கருத்துக்களையும் அங்ஙனமே அடிக்குறிப்பாகச் சேர்த்துள்ளோம். சிறந்த பாட வேறுபாடுகள் ஆங்காங்கே காட்டப்பட்டுள்ளன. திரு. சு. கன்னியப்ப முதலியாரவர்கள் பதிப்பின் ஒப்புநோக்கால் செப்பம் அமைந்தனவும் பல. விரைவில் தொல். சொல். இளம்பூரண அடிகள் உரையும் கழக வாயிலாக வெளியிடக் கருதியுள்ளோம். அதுவும் வெளிவரின் தொல்காப்பியம் முழுமைக்கும் இளம்பூரண அடிகள் உரை கழக வெளியீடாக அமையும். இவ்வெளியீட்டில் சிறந்த அருஞ்சொற்பொருள் வரிசையும் சேர்த்துள்ளோம். இளம்பூரண அடிகள் உரை, திட்பநுட்பம் செறிந்தது; சுருக்க விளக்கமிக்கது; தெளிவு நிறைந்தது; யாவரும் மிகுதியும் போற்றற்குரியது.

இதனை ஆசிரியர், மாணவர், பெருமக்கள் அனைவரும் வாங்கிக் கற்பித்தும் கற்றும் போற்றியும் ஆதரிப்பார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

கு. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்,

# முன்னுரை

[சித்தாந்த பண்டிதர், கழகப்புலவர் ப. இராமநாதபிள்ளை]

## நூல்

அல்கா விழுப்பஞ்சேர் தொல்காப்பியம், ஒல்காப்பெரும் புகழ்த் தமிழ் முனிவரர் தொல்காப்பியனாரால் செய்தருளப் பெற்றது. இது, எழுத்து, சொல், பொருள் என்னும் மூன்றுறுப்பு அடங்கிய பிண்டம். இம்மூன்றனையும் தொன்மை நல்லிசைச் சான்றோர் 'எழுத்துப்பால், சொற்பால், பொருட்பால், என வழங்கி வந்ததாகத் தெரிகின்றது. இவ்வுண்மை இறையனார் களவியலுரையுள் (நூ. இணையே கைகோள்) 'தொல்காப்பியனார் பொருட்பால் உள்ளும் கண்டுகொள்க' என நக்கீரனார் உரைக்கும் நல்லுரையால் விளங்கும். இது, திருவள்ளுவநாயனார் அருளிய தமிழ்ப் பொதுமறையாம் திருக்குறளுக்கு அமைந்துள்ள அறத்துப்பால், பொருட்பால், இன்பத்துப்பால் என்னும் பகுதிகளோடு ஒருங்கொத்துத் திகழ்வது காண்க. இப்பொழுது அதிகாரம் என வழங்கப்படுகின்றது.

## சிறப்பு

இந்நூல் இப்பொழுது உலகிடை நிலவும் எல்லாத் தொன்மை மொழிகட்கும் காலத்தாலும், சீரமைப்பாலும் மிகமிக முந்தியதென்பது நடுநிலை அறிஞர் பல்லோர் கண்டு நவின்ற நன்முடிபாகும். இது மொழியமைதியை வரம்புபடுத்தி வனப்புறச் செய்யும் கருவி நூலாகும். அம்மட்டோடும் அமையாது உறையும் நிலமும், உதவும் பருவமும், இயக்கும் இயவுளும், உண்ணும் உணவும், உஞற்றும் உழைப்பும், எண்ணும் இசையும், எய்தும் நண்பும் பிறவும் இனிதாய் அமையும் பான்மையும், இவற்றால் ஒவ்வொருவருக்கும் உணர்ச்சியும் எழுச்சியும் விழுப்பமுற்று ஒழுக்கநெறி வாழும் அறப்பாங்கும், அவ்வறந்தலை நின்றார் மெலியாரை வலியார் நலியவொட்டாது புறந்தரும் போற்றருங் கடமையும் முறையே பொருட்பாலில் அகம் புறம் என்னும் இருபெருந் தலைப்பால் விளக்கியருளுகின்றனர். மேலும், களவு, கற்பென்னும் ஒழுகலாறுகளால் காதலர்கள் இருவருளால் துணை கையேற்றலும், சேர்ந்து தொண்டியற்றலும் ஆகிய சான்றாண்மையை வலியுறுத்தும் அரும்பெருந் தமிழ்ப் பண்பாட்டியலும்

உ. மற்றைய மொழிகள் போலாது கூட்டல் குறைத்தல் இயலாதவர்க்கு முயற்சியாலாகும் எழுத்தொலிகள் இவை யென்றும், முயற்சி வேற்றுமையா லாகக்கூடிய எண்ணிறந்த எழுத்தொலிகள் இவை என்றும் தமிழ் பாகுபடுத்தி யுணர்த்துகின்றது.

ங. வாக்குறுப்புக்களின் கூட்டல் குறைத்தல் ஏலாத குறிப்பான முயற்சிகளால் ஒலிக்கக்கூடிய எல்லா எழுத்துக்களும் தமிழ்மொழியில் 'உயிர்கள்' என வழங்கும் பன்னிரண்டும் 'உடல்கள்' என வழங்கும் பதினெட்டுமே.

ச. தமிழெழுத்துக்களினமைப்பைவிட எளியது நினைத்தற் கெட்டாதாயினும், அதுவே எல்லாமொழிகளுக்கும் பொதுவான அமைப்பாம்.

தமிழ்நெடுங்கணக்கின் வரிவடிவம் 'முத்தமிழ்' என்ற குழூஉக் குறியால் விளங்கும் பிரணவத்தின் வடிவத்தினின்றே எழுந்தன என்பதையும், இயற்கை நிலைமைகளை இனிது விளக்கும் தமிழ் எழுத்தொலிகளின் சிறந்த ஆற்றலையும், அவற்றின் மந்திரப் பொருளையும் திருவாளர் நாயக்கரவர்கள் தமது 'தமிழ் மறை விளக்கம்' என்ற நூலில் இனிது விளக்கியிருக்கின்றனர். அவற்றின் சுருக்கம் வருமாறு :

க. இயற்கையின் மூலவடிவமாயுள்ள கருவின் உருவமே தமிழில் ஒகாரம்; அஃதாவது மூலப்பிரணவம். இவ்வடிவே கடவுளுடைய அஞ்சற்கையும் அருளற்கையும் விளங்கும் திருவுருவமாகக் காணப்பட்டுள்ளது. இவ்வடிவினின்றே தமிழின் மற்றைய வடிவங்கள் கிளம்பியிருக்கின்றன.

உ. எழுத்துக்களின் மந்திரப் பொருளும், மொழிபடு பொருளும் தமிழில் ஒன்றாக இருப்பது எதனினும் காணாக் காட்சி. 'தனிநிலை,' 'உயிர்கள்,' 'உடல்கள்' என்பன தமிழெழுத்துக்களின் பகுப்புப் பெயர்களாம்.

மேலும் இஞ்ஞான்றைப் பன்மொழிப் புலமைசான்ற திறனினோர், உலக மொழிகளின் ஒலி நுட்ப அமைதி இலக்கணங்களை நன்காய்ந்து ஆங்கிலத்தில் பல நூல்கள் வெளியிட்டுள்ளனர். அவற்றுள் அவர்கள் இஞ்ஞான்று பலவகைக் கருவிகளின் துணைகொண்டு செம்மையாக ஆராய்ந்துகாணும் முடிபுகளுக்கு மிகவும் ஒத்து நனிமிகச் சிறப்பாக நாலாயிர ஐயாயிர யாண்டுகளுக்கு முன் தோன்றியுள்ள முழுமுதல் தனித்தமிழ்த் தொல்காப்பியத்தின்கண் காணப்படும் ஒலிநுட்ப அமைதி வியக்கத்தக்கதொன்றாகும் என்று வெளிப்படையாக நவின்றுள்ளனர்.

பழந்தமிழர்

ஆசிரியர் தொல்காப்பியனார் மிகப் பெருந் தமிழ்க் குடியினராவர். தமிழ்ப் பழங்குடிகளாகிய 'குறுக்கையர்,' 'ஏயர்கோன்,' 'காப்பியன்,' 'சேக்கிழான்' என்பன போன்ற குடிப்பெயரே தொல்காப்பியனாருக்குமாகும். அச்சொல் இயம் காப்பு என இருந்து நிலைமாறி வழங்கியிருக்குமெனவும் உய்த்துணரவும் கூடும். இல்முன் என்பது முன்றில் என வழங்குவது இதற்குக் காட்டாகலாம். இதை யொழித்து அப் பெருந்தமிழ் முனிவரை வடவராக்க முயன்று கட்டிய கதைகள் வாய்மையுடையனவாகா. மேலும் சமதக்கினியார் மகனார் என்றும் பரசுராமரின் உடன் பிறந்தார் என்றும் கூறுவர். பரசுராமர் காலத்துக்கும் தொல்காப்பியனார் காலத்துக்கும் இடையிட்ட காலம் பல ஆயிரயாண்டுகளாகும். அதனாலும் அக்கதை பொருந்தாப் புனைவென்பதே தேற்றம்.

காலம்

ஆசிரியர் மறைமலையடிகளார் தம் அளப்பரிய நுண்மாண் நுழைபுலச் செம்மையால் மாற்றரும் ஏற்குமாறு அகப்புறச் சான்றுகளால் அறுதியிட்டு 'மாணிக்கவாசகர் காலம்' என்னும் பெருநூலின்கண்ணும், 'பண்டைக்காலத் தமிழர் ஆரியர்' என்னும் அருநூலின்கண்ணும் வரையறுத்துள்ளார்கள். ஆண்டு விரிவாகக் கண்டுகொள்க. சுருக்கம் வருமாறு:

கி. மு. மூவாயிரம் ஆண்டுகட்கு முன்னே தொல்காப்பியனார் இருந்தார். எனவே, தலைச்சங்க காலத்தவரல்லால் இடைச்சங்க காலத்தவரல்லரென ஓர்ந்து கொள்க. பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி ஐயாயிர ஆண்டுகட்குமுன் தலைச்சங்க காலத்தில் இருந்தோன். (அவனைப்பற்றிக் காரிகிழார் பாடிய புறநானூற்று ஆறும் பாட்டில்) 'ஞமன்' என்னுஞ் சொல் ஆளப்பட்டுள்ளது. ஆசிரியர் தொல்காப்பியனார் 'ஆ, எ, ஒ என்னும் மூவுயிர் ஞகாரத்துரிய' எனச் சூத்திரஞ் செய்துள்ளார். அதனால் அவர் காலத்து ஞமன் என்னும் சொல் வழக்கத்தில் இல்லை என்பது தெளிவு. இதனாலும், வடமொழி ஐந்திர இலக்கணம் இயற்றிய இந்திரனுக்கும், வடமொழி இலக்கணப் பாணினியாருக்கும் இடையிட்டுத் தோன்றிய இலக்கணவாசிரியர் அறுபத்து நால்வராவர்.'' இதனாலும் தொல்காப்பியர் காலம் ஐயாயிரத்துக்கு முன் என்பது வலியுறுத்தப்படும்.

# உள்ளுறை

# தொல்காப்பியம்

## எழுத்ததிகாரம்

### இளம்பூரணம்



### சிறப்புப்பாயிரம்

வடவேங்கடந் தென்குமரி
ஆயிடைத்
தமிழ்கூறு நல்லுலகத்து
வழக்குஞ் செய்யுளும் ஆயிரு முதலின்
எழுத்துஞ் சொல்லும் பொருளும் நாடிச்
செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்
புலந்தொகுத் தோனே போக்கறு பனுவல்
நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து
அறங்கரை நாவின் நான்மறை முற்றிய
அதங்கோட் டாசாற்கு அரில்தபத் தெரிந்து
மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி
மல்குநீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த
தொல்காப் பியனெனத் தன்பெயர் தோற்றிப்
பல்புகழ் நிறுத்த படிமை யோனே.

*எந்நூல் உரைப்பினும் அந்நூற்குப் பாயிரம் உரைத்து உரைக்க வென்பது மரபு. என்னை? "ஆயிர முகத்தான் அகன்ற தாயினும், பாயிர மில்லது பனுவ லன்றே" என்ப வாகலின். பாயிரமென்பது புறவுரை. அது நூற்குப் புறவுரையேல் அதுகேட்டு என்னை பய னெனின், கற்றவல்ல கணவற்குக் கற்புடையாள்போல இன்றியமை*

யாச் சிறப்பிற்றாயும் திருவமைந்த மாநகரத்திற்கு உருவமைந்த வாயின் மாடம்போல அலங்காரமாதற் சிறப்பிற்றாயும் வருதலானும், பாயிரம் கேளாதே நூல் கேட்குமேயெனில் குறிச்சி புக்க மான்போல மாணாக்கன் இடர்ப்படுமாகலானும், பாயிரங்கேட்டல் பயனுடைத்தாயிற்று. அப்பாயிரம் பொதுவும் சிறப்பும் என இருவகைத்து. எல்லா நூன் முகத்தும் பொதுவாக உரைக்கப்படுதலிற் பொதுவெனப்பட்டது. "ஈவோன் றன்மை" முதலிய நூலுட் சொல்லும் பொருளல்லாத புறப் பொருளைக் கூறும் பொதுப்பாயிரம் போலாது, நூலகத்தெல்லாம் பயத்தன் மாத்திரையேயன்றி அந்நூலிற் சொல்லப்படுகின்ற பொருள் முதலிய உணர்த்தலின், அணியிழை மகளிர்க்கு அவ்வணியிற் சிறந்த ஆடைபோல நூற்குச் சிறத்தலாற் சிறப்பெனப்பட்டது.

அவற்றுள், பொது நால்வகைத்து.

"ஈவோன் தன்மை யீத லியற்கை
கொள்வோன் தன்மை கோடன் மரபென
ஈரிரண் டென்ப பொதுவின் தொகையே."

இதனுன் அறிக.

ஈவோர் கற்கப்படுவோரும் கற்கப்படாதோரும் என இருவகையர். கற்கப்படுவோர் நான்கு திறத்தான் உவமம் கூறப்படுவர்.

"மலைநிலம் பூவே துலாக்கோலென் றின்னர்
உலைவி லுணர்வுடை யார்."

இதனுன் அறிக.

இனிக் கற்கப்படாதார்க்குக் கூறும் உவமமும் நால்வகைத்து.

"கழற்பெய் குடமே மடற்பனை முடத்தெங்கு
குண்டிகைப் பருத்தியோ டவையென மொழிப."

இதனுன் அறிக.

ஈதலியற்கை :

"ஈத லியல்பே யியல்புறக் கிளப்பின்
பொழிப்பே யகலம் நுட்ப மெச்சமெனப்
பழிப்பில் பல்லுரை பயின்ற நாவினன்
புகழ்ந்த மதியிற் பொருந்தும் ஓரையில்
தெளிந்த அறிவினன் தெய்வம் வாழ்த்திக்
கொள்வோ னுணர்வகை அறிந்தவன் கொள்வரக்
கொடுத்தல் மரபெனக் கூறினர் புலவர்."

இதனுன் அறிக.

கொள்வோர் கற்பிக்கப்படுவோரும் கற்பிக்கப்படாதோரும் என இருவகையர். கற்பிக்கப்படுவோர் அறுவகை. அவர்தாம்,

"தன்மக னாசான் மகனே மன்மகன்
பொருணனி கொடுப்போன் வழிபடு வோனே
உரைகோ ளாளனோ டிவரென மொழிப."

இதனுன் அறிக. இவர் தன்மை :

"அன்னங் கிளியே நன்னிற நெய்யரி
யானை யானே றென்றிவை போலக்
கூறிக் கொள்ப குணமாண் டோரே."

இதனான் அறிக.

இனிக் கற்பிக்கப்படாதார் எண்வகையர்.

"மடிமானி பொச்சாப்பன் காமுகன் கள்வன்
அடுநோய்ப் பிணியாளன் ஆறாச் சினத்தன்
தடுமாறு நெஞ்சத் தவனுள்ளிட் டெண்மர்
நெடுநூலைக் கற்கலா தார்."

இதனான் அறிக.

இவர் தன்மை:

"குரங்கெறி விளங்கா யெருமை யாடே
தோணி யென்றாங் கிவையென மொழிப."

இதனான் அறிக.

கோடன்மரபு:

"கொள்வோன் முறைமை* கூறுங் காலைப்
பொழுதொடு சென்று வழிபடல் முனியான்
முன்னும் பின்னும் இரவினும் பகலினும்
அகலா னாகி அன்பொடு புணர்ந்தாங்†
‡காசற வுணர்ந்தோன் வாவென வந்தாங்
கிருவென இருந்தே டவிழென வவிழ்த்துச்
சொல்லெனச் சொல்லிப் போவெனப் போகி§
¶நெஞ்சுகள னாகச் செவிவா யாகக்
கேட்டவை கேட்டவை வல்ல னாகிப்
போற்றிக் கோட லவனது தொழிலே."$

"எத்திறத் தாசா னுவக்கும் அத்திறம்
அறத்திற் றிரியாப் படர்ச்சிவழி பாடே."

"செல்வன் தெரிகிற்பான் மெய்ந்நோக்கிக் காண்கிற்பான்
பல்லுரையுங் கேட்பான் மிகப்பெரிதும் காதலான்
தெய்வத்தைப் போல மதிப்பான் றிரிபில்லான்
இவ்வாறு மாண்பு முடையாற் குரைப்பவே
செவ்விதி னூலைத் தெரிந்து."

"வழக்கின் இலக்கணம் இழுக்கின் றறிதல்
பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல்
ஆசாற் சார்ந்தவை யமைவரக் கேட்டல்
அம்மாண் புடையோர் தம்மொடு பயிறல்
வினாதல் வினாயவை விடுத்த லென்றிவை
கடனாக் கொளினே மடநனி யிகக்கும்."

(நச்சி. பாடம்) *கோடன் மரபு. †கெழீஇக். ‡குணத்தொடு பழகிக் குறிப்பின் வழிநின்று. §செல்லெனச் சென்று. ¶பருகுவ னன்ன ஆர்வத்தனாகிச், சித்திரப் பாவையின் அத்தக அடங்கிச். $ அதனது பண்பே.

" அனையன் அல்லோன் கொள்குவ[1] னாயின்
வினையி னுழப்பொடு பயன்றலைப் படாஅன்."

இவற்றான் அறிக.

இவ்வாறு கோடன் மரபுடைய மாணாக்கன் நூன்முற்ற அறிந்தானுமாறு :

" ஆசா னுரைத்தவை யமைவரக் கொளினும்
காற்கூ றல்லது பற்றல னாகும்."

" அவ்வினை யாளரொடு பயில்வகை யொருபால்
செவ்வி தின் உரைப்ப அவ்விரு பாலும்
மையறு புலமை மாண்புநனி யுடைத்தே."

இவற்றான் அறிக

சிறப்புப் பதினொரு வகைத்து :

" ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை
நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே
கேட்போர் பயனோ டாயெண் பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே."

" காலங் களனே காரண மென்றிம்
மூவகை யேற்றி மொழிநரு முளரே."

இவற்றான் அறிக.

இனி, அச்சிறப்பிலக்கணம் செப்புமாறு :

" பாயிரத் திலக்கணம் பகருங் காலை
நூனுதல் பொருளைத் தன்னகத் தடக்கி
ஆசிரியத் தானும் வெண்பா வானும்
மருவிய வகையான் நுவறல் வேண்டும்."

இதனான் அறிக.

நூல் செய்தான் பாயிரம் செய்வானல்லன் :

" தோன்றா தோற்றித் துறைபல முடிப்பினும்
தான்தற் புகழ்தல் தகுதி யன்றே"

என்பவாகலின்.

பாயிரம் செய்வார் தன் ஆசிரியனும், தன்னோடு ஒருங்கு கற்ற மாணாக்கனும், தன் மாணாக்கனும் என மூவகையர். அவருள் இந்நூற்குப் பாயிரம் செய்தார் தன்னோடு ஒருங்கு கற்ற பனம்பாரனார்.

(இ - ள்.) வடவேங்கடம் தென்குமரி ஆ இடைத் தமிழ் கூறும் நல் உலகத்து வழக்கும் செய்யுளும் ஆ இருமுதலின் - வடக்கின்கண் ணுளதாகிய வேங்கடமும் தெற்கின்கண் ணுளதாகிய குமரியுமாகிய அவற்றை எல்லையாக* வுடைய நிலத்து வழங்

(பாடம்) 1. கேட்குவ.

* வட......முதலின் - வடக்கின்கண் வேங்கடமும் தெற்கின்கண் குமரியுமாகிய அவ்விரண்டெல்லைக்குள்ளிருந்து தமிழைச் சொல்லும் நல்லாசிரியரது வழக்கும் செய்யுளுமாகிய அவ்விரண்டையும் அடியாகக் கொள்ளுகையினாலே. (நச்சினார்க்கினியர்)

கும் தமிழ்மொழியினைக் கூறும் நன்மக்களான் வழங்கும் வழக்கும் செய்யுளுமாகிய இரு காரணத்தானும்,[1] எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி - எழுத்திலக்கணத்தினையும் சொல்லிலக்கணத்தினையும் பொருளிலக்கணத்தினையும் ஆராய்ந்து, செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு முந்துநூல் கண்டு - (அவ்வாராய்ச்சியிற் குறைபாடுடையவற்றிற்குச்) செந்தமிழினது இயல்பு பொருந்தின செந்தமிழ் நிலத்து வழக்கோடு முதல்நூல்களிற் சொன்னவற்றினைக் கண்டு, முறைப்பட எண்ணி - அவ்விலக்கணம் முறைப்பட ஆராய்ந்து, நிலம் தரு திருவின் பாண்டியன் அவையத்து - மாற்றாது நிலத்தினைத் தனகீழ் வாழ்வார்க்குக் கொண்டுகொடுக்கும் போர்த்திருவினையுடைய பாண்டியன் மாகீர்த்தியது அவைக்கண்ணே, அறம் கரை நாவின் நால்மறை முற்றிய அதங்கோட்டு ஆசாற்கு-(அவ்வவையுள்ளார்க் கேற்பத் தெரிந்தே நின்ற) மெய் சொல்லும் நாவினையுடைய நான்கு வேதத்தினையும் முற்றவுணர்ந்த அதங்கோடு என்கின்ற ஊரின் ஆசானுக்கு, அரில் தப தெரிந்து - கடா அறத் தெரிந்துகூறி மயங்கா மரபின் எழுத்து முறை காட்டி - (அவ்வெழுத்தும் சொல்லும் செய்கின்றுழி முன்னை நூல்போல எழுத்திலக்கணம் சொல்லுட்சென்று) மயங்காத முறைமையானே எழுத்திலக்கணத்தினை வேறு தெரிவித்து, மல்கு நீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன் என தன் பெயர் தோற்றி - (அவ்வாறு செய்கின்றுழி) மிக்க நீரையுடைய கடலாகிய எல்லையையுடைய உலகின்கண்ணே இந்திரனாற் செய்யப்பட்ட ஐந்திர வியாகரணத்தினை நிறைய அறிந்த பழைய காப்பியக்குடியினுள்ளோனெனத் தன் பெயரைத் தோற்றுவித்து, போக்கு அறு பனுவல் - நூற்குச் சொல்லப்பட்ட குற்றங்களற்ற தன்னூலுள்ளே, புலம் தொகுத்தோன்-அவ்விலக்கணங்களைத் தொகுத்துக் கூறினான், (அவன் யாரெனில்,) பல் புகழ் நிறுத்த படிமையோன் - (தவத்தான்வரும்) பல்புகழ்களை உலகிலே நிறுத்தின தவவொழுக்கத்தினையுடையான்.

வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின் எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி முறைப்பட எண்ணி, பாண்டியன் அவையத்து அதங்கோட்டு ஆசாற்கு அரில்தபத் தெரிந்து, எழுத்திலக்கணத்தைச் சொல்லும் முறைமை மயங்கா மரபிற் காட்டி, தொல்காப்பியனெனத் தன் பெயர் தோற்றி, பனுவலுள் புலந்தொகுத்தோன் படிமையோன் எனக் கூட்டுக.

வடவேங்கடந் தென்குமரி யெனவே, எல்லை பெறப்பட்டது. வழக்குஞ் செய்யுளும் ஆயிரு முதலி னெனவே, நூல் நுதலியதூஉம்

[1] (பாடம்) 1. நச். அவ்விரண்டையும் அடியாகக் கொள்ளுகையினாலே. சிவஞான முனிவர், பெரிய காரணத்தானே.

பயனும் பெறப்பட்டன. முந்துநூல் கண்டு முறைப்பட வெண்ணி யெனவே, வழியும் யாப்பும் காரணமும் பெறப்பட்டன. பாண்டிய னவையத் தெனவே, காலமுங் களனும் பெறப்பட்டன. அதங்கோட் டாசாற் கரில்தபத் தெரிந் தெனவே, கேட்டோர் † பெறப்பட்டது. தொல்காப்பியனெனத் தன்பெயர் தோற்றியெனவே, ஆக்கியோன் பெயரும் நூற்பெயரும் பெறப்பட்டன.

‡ மங்கலத்திசையாகலின், வடக்கு முன்கூறப்பட்டது. கடல்கொள் வதன் முன்பு பிறநாடும் உண்மையின், தெற்கும் எல்லைகூறப்பட்டது. கிழக்கும் மேற்கும் பிறநாடு இன்மையின், கூறப்படா வாயின. பிற இரண்டெல்லை கூறாது இம்மலையும் ஆறும் கூறியது, அவை தீர்த்தமாக லானும் கேடிலவாதலானும் எல்லாரானும் அறியப்படுதலானுமென்பது. இவை அகப்பாட்டெல்லை

ஆயிடைத் தமிழ்கூறும் நல்லுலகத்தென்றது, அவ்வெல்லை தமிழ் கூறும் நல்லாசிரியரது என்றவாறு. நல்லாசிரியர் - அகத்தியனார் முத லாயினோர். உலக மென்பது ஆசிரியரை. § அ என்றது ஆகு பெயரான்,

---

* "தொகுத்தல் முதலிய வகையினை யாப்பென்று கூறினார். தொகுத்தல் முதலியன வழியுள் அடங்குதலானும் இயைபும் ஒரு தலையான் உணர்தற்பாலதாகலானும், அவருரை போலியுரை என்பது"
—தொல்காப்பியச் சூத்திரவிருத்தி

† "ஒருவராற் செய்யப்பட்ட நூல் ஒரு வேந்தனவைக்களத்தில் ஒரு புலவனுக்கு ஏற்பித் தாங்கேறின் அது சிறக்குமாகலின், பாண்டிய னவையின் அதங்கோட்டாசாற் கரில்தபத் தெரிவித்தான் என்பதும் இக்கருத்தேபற்றி ஒருசாரார் ஆக்கியோன் பெயர் முதலிய எட்டனோடு களமும் அக்களத்தின் அரங்கேற்றிய காலமும் கூட்டி எண்ணி நூல் செய்தற் கேதுவிஃதென்னும் காரணமும், உடன்சேர்த்துப் பதி னொரு வகைத்துச் சிறப்புப்பாயிரம் என்றுரொன்பதும் இக்கருத் தறியாத உரையாசிரியரை உள்ளிட்டோரெல்லாம் நூல் அரங்கேறும் அவைக்களத்துக் கேட்டாரைக் கேட்போரென்று கூறினார். ஆக்கி யோன் பெயர் முதலிய பொருள் என்பனபோல இறந்தகாலத்தாற் கூறாது கேட்போர் என எதிர்காலத்தாற் கூறியதே அஃது உரையன் மைக்குச் சான்றாகலானும், காலங் களத்துளடங்குதலின் வேறு கூற வேண்டாமையானும், ஆக்கியோன் பெயர் முதலியனபோல நூல் வழங்குங் காலத்து நிகழ்வதன்றாகலின் இவற்றோடு பொருங்குவைத்து எண்ணுதல் பொருந்தாமையானும், கேட்டற்குரிய அதிகாரிகளாவாரை ஒருதலையாக வுணர்த்தல் வேண்டுமாகலானும் அவருரை போலியுரை என்பதும்' —தொல்காப்பியச் சூத்திரவிருத்தி.

‡ "தமிழ்நாட்டிற்கு வடக்கட் பிறவெல்லையும் உளவாக வேங்க டத்தை எல்லையாகக் கூறினார், அகத்தியனார்க்குச் செவியறிவுறுத்த செந்தமிழ்ப் பரமாசாரியனாகிய அறுமுகக்கடவுள் வரைப்பென்னும் இயைபுபற்றி என்பது"—தொல். சூத்திரவிருத்தி.

§ வடவேங்கடம் தென்குமரியென்பன அன்மொழித்தொகையாய் அவற்றை எல்லையாகவுடைய நிலத்தை யுணர்த்தின. இஃதறியாதார் ஆயிடை என்புழித் தனித்துநின்று பொருளுணர்த்தலாற்றாத அகரச் சுட்டினை ஆகுபெயரென்றும், அவற்றுக்குள் என உருபு விரித்தும் இடர்ப்படுப" என்பது—தொல். சூத்திரவிருத்தி.

அவற்றை எல்லையாக வுடைய நிலத்தினை, இடையென்பது எழா முருபு. முறைப்பட வெண்ணி யென்றது, அம்மூந்து நூல்களில் ஒன்றற் குரிய இலக்கணத்தினை ஒன்றன் இலக்கணத்தோடு ஆராய்ந் தாற்போல ஆராயாது முறைப்பட ஆராய்ந்து என்றவாறு. மற்று, நூல் செய்யும் இலக்கணமெல்லாம் இந்நூலுட்படச் செய்தானென்பது. இம்முறைப்பட வெண்ணி யென்றதனுற் கொள்க. அவையாமாறு ;

" ஒத்தே சூத்திர மெனவிரு வகைய"

" நேரின மணியை நிரல்பட வைத்தாங்
கோரினப் பொருளை யொருவழி வைப்ப
தோத்தென மொழிப வுயர்மொழிப் புலவர்."
(செய்யுளியல் - கஎக)

" நுட்ப மொட்பந் திட்பஞ் சொல்லிற்
சுருக்கங் கருத்துப் பகுதியோடு தொகைஇ
வருத்தமில் பொருட்பய னிகழ்ச்சி சூத்திரம்."

" பொதுவி னுஞ் சிறப்பினும் போற்றுங் காலைப்
பெறுபல் பெற்றவை காத்தல் காப்பொடு
பிறிதுபெற நிகழ்த்த லதன்கருத் தாகும்."

அதுவே,

" பிண்டந் தொகைவகை குறியே செய்கை
கொண்டியல் புறனடை யென்றதன் விகற்பமோ
டொன்றிய குறியே யொன்று மென்ப."

" ஆற்ற தொழுக்கே தேரைப் பாய்வே
சீய நோக்கே பருந்து வீழ்வென்
றுவகை நான்கே கிடக்கைப் பயனே."

" பொழிப்பே யகல நுட்ப மெச்சமெனப்
பழிப்பில் சூத்திரப் பயனான் கென்ப."

" பாடங் கண்ணழி வுதாரண மென்றிவை
நாடிற் றிரிபில வாகுதல் பொழிப்பே."

" தன்னூல் மருங்கினும் பிறநூல் மருங்கினுந்
துன்னிய கடாவின் புறந்தோன்று விகற்பம்
பன்னிய வகல மென்மனார் புலவர்."

" ஏதுவி னுங்கவை துடைத்த னுட்பம்."

" துடைத்துக்கொள் பொருளை யெச்ச மென்ப."

இவற்றானும் பிறவற்றானும் அறிக.

இனி, நூல்செய்தற்கு உரியானையும், நூல்செய்யும் ஆற்றையும் சொல்லுதும்.

" அப்புல மரில்தப வறிந்து முதனூல்
பக்கம் போற்றும் பயன்தெரிந் துலகத்
திட்ப முடைய தெளிவர வுடையோன்
அப்புலம் படைத்தற் கமையு மென்ப."

"சூத்திர முறையென் றுயிரு திறனும்
பாற்படப் போற்றல் படைத்த லென்ப
நூற்பய னுணர்ந்த நுண்ணி யோரே."

இவற்றான் அறிக.

போக்கு அறுதல்-நூற்குக்கூறுங் குற்றங்களற்று நன்மையுளவா தல். அவை:

"ஈரைங் குற்றமும் இன்றி நேரிதின்
எண்வகைப் புணர்ப்பின தென்மனார் புலவர்."

இதனான் அறிக.

'எழுத்தும் சொல்லும் பொருளும்' என வைத்துப் பின்னும் 'மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி' என்றது, பிறநூல்போலச் சொல்லுள் எழுத்தினை மயக்கிக் கூறாது, வேறு சேரக் கூறினானென்ற தென்பது.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

# தொல்காப்பியம்

## எழுத்ததிகாரம்

## இளம்பூரணம்



இவ்வதிகாரம் என் னுதலி எடுத்துக்கொள்ளப்பட்டதோ வெனின், அதிகாரம் நுதலியதூஉம் அதிகாரத்தினது பெயர் உரைப்பவே அடங்கும். அதிகாரம் என்ன பெயர்த்தோ வெனின், எழுத்ததிகாரம் என்னும் பெயர்த்து. எழுத்துணர்த்தினமை காரணத்திற்பெற்ற பெயர் என உணர்க.

எழுத்து எனைத்துவகையான் உணர்த்தினாரோ வெனின், எட்டு வகையானும் எட்டிறந்த பலவகையானும் உணர்த்தினாரென்பது. அவற்றுள்,

எட்டுவகையாவன: எழுத்து இனைத்தென்றலும், இன்ன பெயர வென்றலும், இன்ன முறைமைய வென்றலும், இன்ன அளவின வென்றலும், இன்ன பிறப்பின வென்றலும், இன்ன புணர்ச்சிய வென்றலும், இன்ன வடிவின வென்றலும், இன்ன தன்மைய வென்றலும். எனவே, அவற்றுள் தன்மையும் வடிவும் ஆசிரியர் தாம் உணருவ ரெனினும், நமக்கு உணர்த்தல் அருமையின் ஒழிந்த ஆறுமே இதனுள் உணர்த்தினார் என உணர்க.

இனி, எட்டிறந்த பலவகையாவன: உண்மைத்தன்மையும், குறைவும், கூட்டமும், பிரிவும், மயக்கமும், மொழியாக்கமும், நிலையும், இனமும், ஒன்று பலவாதலும், திரிந்ததன் திரிபது வென்றலும், பிறிதென்றலும், அதுவும் பிறிதும் என்றலும், நிலையிற் றென்றலும், நிலையா தென்றலும், நிலையிற்று நிலையா தென்றலும், இன்னோரன்னவும் என இவை. இவையெல்லாம் ஆமாறு மேல் வந்தவழிக் கண்டுகொள்க.

இவ்வதிகாரத்திலக்கணம் கருவியும் செய்கையும் என இருவகைத்து. அவற்றுள், கருவி புறப்புறக்கருவியும், புறக்கருவியும், அகப்புறக்கருவியும் அகக்கருவியும் என நான்குவகைப்படும். செய்கை புறப்புறச்செய்கையும், புறச்செய்கையும், அகப்புறச்செய்கையும், அகச்செய்கையும் என நான்கு வகைப்படும். நூன்மரபும் பிறப்பியலும் புறப்புறக்கருவி; மொழிமரபு புறக்கருவி; புணரியல் அகப்புறக் கருவி.

"எகர வொகரம் பெயர்க்கீ றாகா
முன்னிலை மொழிய வென்மனார் புலவர்"

(உயிர் மயங்கியல்-௭0.)

என்றாற்போல்வன அகக்கருவி.

"எல்லா மொழிக்கு முயிர்வரும் வழியே
உடம்படு மெய்யி னுருபுகொளல் வரையார்"

(புணரியல்-௩௪.)

என்றாற்போல்வன புறப்புறச்செய்கை.

"லனவென வரூஉம் புள்ளி முன்னர்த்
தநவென வரிற் றனவா குமே" (தொகைமரபு-௭.)

என்றாற்போல்வன புறச்செய்கை.

"உகரமொடு புணரும் புள்ளி யிறுதி
யகரமும் உயிரும் வரும்வழி யியற்கை"

(தொகைமரபு-?௧.)

என்றாற்போல்வன அகப்புறச்செய்கை.

தொகைமரபு முதலிய ஓத்தினுள், இன்ன ஈறு இன்னவாறு முடியுமெனச் செய்கை கூறுவன வெல்லாம் அகச்செய்கை.

# க. நூன்மரபு

இவ்வோத்து என்னுதலிற்றோ வெனின், அதுவும் அதன்பெயர் உரைப்பவே அடங்கும். இவ்வதிகாரத்தாற் சொல்லப்படும் எழுத்திலக்கணத்தினை* ஓராற்றால் தொகுத்து உணர்த்துதலின், நூன்மரபு என்னும் பெயர்த்து. இதனுட் கூறுகின்ற இலக்கணம் மொழியிடை (நின்ற) எழுத்திற்கன்றித் தனிநின்ற எழுத்திற்கென உணர்க.

## க. எழுத்துக்களின் வகை

க. எழுத்தெனப் படுப
அகரமுதல் னகர இறுவாய்
முப்பஃ தென்ப
சார்ந்துவரல் மரபின் மூன்றலங் கடையே.

**இத்தலைச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின்† எழுத்துக்களது பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.**

*இப்பெற்றி யறியாத உரையாசிரியர் முதலியோர் இவ்வதிகாரத்தாற் சொல்லப்படும் எழுத்திலக்கணத்தை ஓராற்றால் தொகுத்துணர்த்துதலின் நூன்மரபாயிற்றென்பாரும், இவ்வோத்துட் கூறப்படும் விதிகள் மூன்றதிகாரத்திற்கும் பொதுவாகலின் நூன்மரபென்னும் பெயராயிற்றென்பாருமாயினர். இவ்வதிகாரத்துட் கூறும் எழுத்திலக்கணத்தினைத் தொகுத்துணர்த்துதலாற் பெற்ற பெயராயின் அதிகார மரபெனப்படுவதன்றி நூன்மரபெனப்படாமையானும், இவ்வோத்துட் கூறப்படுவன செய்யுளோத்திற்கும் பொருளதிகாரத்துள் செய்யுளியல் ஒன்றற்குமே கருவியாவதன்றி மூன்றதிகாரத்திற்கும் பொதுவாகலானும் அவருரை போலியுரையாதலறிக என்பது"— தொல். சூத்திரவிருத்தி.

† "இனி உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும் இச்சூத்திரம் பெயரும் முறையும் தொகையு முணர்த்திற்றென்றும், அ-ஆ முதலியனவே பெயரென்றும், அம்முறையே முறையென்றும், முப்பஃதெனத் தொகை விதிக்கப்பட்டதென்றும் உரைத்தாராலெனின் அற்றன்று. அஃதாசிரியர் கருத்தாயின், அ-ஆ-இ-ஈ என முழுதும் எடுத்தோதி முறைக்கு ஏதுவும் கூறுவர். அவ்வாறு கூறாது அகரமுதல் னகர இறுவாயென அனுவதித்தே யொழிந்தமையானும், எழுத்தென்பதொருபொருள் அதற்கு அ-ஆ முதலியன பெயரென்றல் பொருந்தாமையானும், அ-ஆ முதலியன அ ஆ முதலியவற்றிற்குப் பெயராதல் கூற வேண்டாமையானும், வேண்டுமெனிற் சொற்களும் பொருளையுணர்த்தாது அவை தம்மையே உணர்த்தும்வழி அவற்றிற்கவை பெயராதல் கூறாமை குன்றக்கூறலாம் ஆகலானும், முறையும் தொகையும் செய்கை முதலியவற்றிற்குக் கருவியன்மையின் அவற்றை விதித்தலாற் பயனின்மையானும் அவருரை போலியுரை என அறிக என்பதும் அகர முதலியவற்றிற்குப் பொதுப்பெயர் கூறுதல் நுதலிற்றென்பதும்,"—தொல். சூத்திரவிருத்தி.

(இ - ள்.) எழுத்து எனப்படுப - எழுத்தென்று சிறப்பித்துச் சொல்லப்படுவன, அகரம் முதல் னகர இறுவாய் முப்பஃது என்ப - அகரமாகிய முதலை யுடையனவும் னகரமாகிய இறுவாயினை யுடையனவுமாகிய முப்பதென்று சொல்லுப (ஆசிரியர்); சார்ந்து வரல் மரபின் மூன்று அலங்கடை - சார்ந்து வருதலாகிய இலக்கணத் தினையுடைய மூன்றும் அல்லாவிடத்து.

மூன்றும் ஆனவிடத்து முப்பத்து மூன்று என்று சொல்லுப என்றவாறு

எ - டு : அ-ஆ-இ-ஈ-உ-ஊ-எ-ஏ-ஐ-ஒ-ஓ-ஔ; க்-ங்-ச்-ஞ்-ட்-ண்-த்-ந்-ப்-ம்-ய்-ர்-ல்-வ்-ழ்-ள்-ற்-ன் எனவரும்.

எனப்படுப என்ற சிறப்பான், அளபெடையும் உயிர்மெய்யும் வரிவடிவும் சிறப்பில்லா எழுத்தாகக் கொள்ளப்பட்டன. அ ஆ என்பன பெயர் : முறை, அம்முறை ; தொகை முப்பது ; அவற்றுள், அகரம் தானும் இயங்கித் தனிமெய்களை இயக்குதற் சிறப்பான், முன்வைக்கப்பட்டது. னகாரம் வீடுபேற்றிற்குரிய ஆண்பாலை உணர்த்துதற் சிறப்பான் பின்வைக்கப்பட்டது.

தொகை (யென்பது) தொகையுள்தொகையும், தொகையுள்வகையும், தொகையுள்விரியும், வகையுள்தொகையும், வகையுள்வகையும், வகையுள்விரியும், விரியுள்தொகையும், விரியுள்வகையும், விரியுள்விரியும் என ஒன்பதுவகைப்படும்.

எழுத்தென்பது தொகையுள்தொகை. முப்பதென்பது அதன் வகை. முப்பத்துமூன்றென்பது அதன் விரி. முப்பதென்பது வகையுள்தொகை. முப்பத்துமூன்றென்பது அதன் வகை. அளபெடை தலைப்பெய்து நாற்பதென்பது அதன் விரி. முப்பத்துமூன்றென்பது விரியுள்தொகை. நாற்பதென்பது அதன் வகை. உயிர்மெய் தலைப்பெய்து இருநூற்றைம்பத்தாறென்பது அதன் விரி. செய்யுளின்பம்நோக்கி வகரம் நீக்கிப் பகரம் இடப்பட்டது. அகரமுதல் னகரவிறுவாய் என்ன, இருபெயரொட்டாகுபெயரான் முப்பதன் மேல் நின்றன. (௧)

சார் பெழுத்துக்கள்

௨. அவைதாம்,
குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற
முப்பாற் புள்ளியும் எழுத்தோ ரன்ன.

இது, மேல் சார்ந்துவரும் என்னப்பட்ட மூன்றற்றும் பெயரும் முறையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அவைதாம்-மேற் சார்ந்துவரும் எனப்பட்டவை தாம், குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற முப்பாற் புள்ளியும் - குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஆய்தமும் என்று சொல்லப்பட்ட மூன்று கூற்றதாகிய புள்ளியும் என இவை,

எழுத்து ஓர் அன்ன - (அவை) மேற்சொல்லப்பட்ட முப்பது எழுத்தோடு ஒரு தன்மைய.

அப்பெயர், பெயர். அம்முறை, முறை. 'எழுத்தோரன்ன' என வேண்டா கூறியவதனான், முன் 'எனப்படுப' என்ற சிறப்பு, அம்மூன்றற்கும் கொள்ளக்கிடந்தமையின், அது விலக்குதல் பெறாது மென்பது. குற்றியலிகரமும் குற்றியலுகரமும் என்னும் எண்ணும்மை விகாரத்தால் தொக்கன. சந்தனக்கோல் குறுகினவிடத்துப் பிரப்பங்கோல் ஆகாது. அதுபோல, இகர உகரங்கள் குறுகினவிடத்தும், அவை *உயிர் ஆகற்பாலன. அவற்றைப் புணர்ச்சிவேற்றுமையும் பொருள்வேற்றுமையும் நோக்கி வேறெழுத்தென்று வேண்டினாரென உணர்க. (உ)

## உ. மாத்திரை

### ஒரு மாத்திரையுடைய குற்றுயிர்

ந. அவற்றுள்
அ இ உ
எ ஒ வென்னும் அப்பால் ஐந்தும்
ஓரள பிசைக்குங் குற்றெழுத் தென்ப.

இது, மேற்கூறப்பட்டனவற்றிற்கு அளபும் குறியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அவற்றுள் - மேற்கூறப்பட்ட எழுத்தினுள், அ-இ-உ-எ-ஒ என்னும் அப்பால் ஐந்தும்-அ-இ-உ-எ-ஒ என்று சொல்லப்படுகின்ற அக்கூற்று ஐந்தும், ஓர் அளபு இசைக்கும் (ஒரோவொன்று) ஓர் அளபாக இசைக்கும், குற்றெழுத்து என்ப - (அவைதாம்) குற்றெழுத்தென்னும் குறிய என்று சொல்லுவர் (புலவர்).

இவர் காரணம்பற்றியன்றிக் குறியிடார். ஆகலின், இது தன் குறுமையான் இக்குறி பெற்றது. இக்குறியை ஆண்டவாறு மேல் வந்த வழிக் கண்டுகொள்க. (ந)

### இரண்டு மாத்திரையுடைய நெட்டுயிர்

ச. ஆ ஈ ஊ ஏ ஐ
ஓ ஔ என்னும் அப்பால் ஏழும்
ஈரள பிசைக்கும் நெட்டெழுத் தென்ப.

இதுவும் அது.

(இ - ள்.) ஆ-ஈ-ஊ-ஏ-ஐ-ஓ-ஔ என்னும் அப்பால் ஏழும்-ஆ-ஈ-ஊ-ஏ-ஐ-ஓ-ஔ என்று சொல்லப்படுகின்ற அக்கூற்று ஏழும், ஈர் அளபு இசைக்கும்-(ஒரோவொன்று) இரண்டு மாத்

(பாடம்) * பெயர்.

திரையாக ஒலிக்கும், நெட்டெழுத்து என்ப - (அவைதாம்) நெட்டெழுத்து என்னும் குறிய என்று சொல்லுவர் (புலவர்).

ஐகார ஔகாரங்களுக்கு இனம் இல்லையெனினும், மாத்திரையொப்புமையான் அவை நெட்டெழுத்து எனப்பட்டன. (ச)

ஓரெழுத்தே மூன்று மாத்திரையாகாமை

ரு. மூவள பிசைத்தல் ஓரெழுத் தின்றே.

இது, உயிரளபெடை யெழுத்திற்கு மாத்திரை கூறுதல் நுதலிற்று.

(இ - ள்.) மூ அளபு இசைத்தல் ஓர் எழுத்து இன்று - மூன்று மாத்திரையாக ஒலித்தல் இயல்பாகிய ஓர் எழுத்திற்கு இல்லை. (விகாரமாகிய இரண்டு கூடியதற்கு உண்டு) (ரு)

மாத்திரை நீளுமாறு

சு. நீட்டம் வேண்டின் அவ்வள புடைய
கூட்டி யெழூஉதல் என்மனார் புலவர்.

இது, உயிரளபெடை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) நீட்டம் வேண்டின் - நீண்ட மாத்திரையை உடைய அளபெடை எழுத்துப்பெற வேண்டின், அ அளபு உடைய கூட்டி எழூஉதல் - மேற்கூறிய இரண்டளபுடைய நெடிலையும் ஓர் அளபுடைய குறிலையும் (பிளவுபடாமற்) கூட்டியெழூஉக, என்மனார் புலவர்-என்று சொல்லுவர் புலவர். (சு)

மாத்திரைக்கு அளபு

எ. கண்ணிமை நொடிஎன அவ்வே மாத்திரை
நுண்ணிதின் உணர்ந்தோர் கண்ட வாறே.

இது, அம்மாத்திரையிலக்கணம் கூறுதல் நுதலிற்று.

(இ - ள்.) கண்ணிமை என நொடி என அவ் மாத்திரை - கண்ணிமையும் நொடியுமாகிய அவை மாத்திரைக்கு அளபு, நுண்ணிதின் உணர்ந்தோர் கண்ட ஆறு - (இது) நுண்ணிதாக நூலிலக்கணத்தினை உணர்ந்த ஆசிரியர் கண்ட நெறி.

இமையென்றது, இமைத்தற்றொழிலை. நொடியென்றது, நொடியிற்பிறந்த ஓசையை. தன் குறிப்பு இன்றி நிகழ்தலின், இமை முன் கூறப்பட்டது. நிறுத்தளத்தல், பெய்தளத்தல், நீட்டியளத்தல், தெறித்தளத்தல்,* தேங்க முகந்தளத்தல், சார்த்தியளத்தல், எண்ணியளத்தல்

* நச். தெறித்தளத்தலென்ப.

என எழுவகைய என்னும் அளவினுள், இது சார்த்தியளத்தல். 'நுண்ணிதினுணர்ந்தோர் கண்டவாறு' என்றதனான், நாலுழக்குக் கொண்டது நாழியென்றாற்போல, அவ்வளவைக்கு அளவை பெறுமை அறிக.*

## ௩. எண்

### பன்னீருயிர்

௮. ஔகார இறுவாய்ப்
பன்னீ ரெழுத்தும் உயிரென மொழிப.

இது, மேற்கூறிய குறிலையும் நெடிலையும் தொகுத்து வேறு ஓர் குறியிடுதல் நுதலிற்று.†

(இ - ள்.) ஔகார இறுவாய்ப் பன்னீர் எழுத்தும்-ஔகாரமாகிய இறுதியையுடைய பன்னிரண்டு எழுத்தினையும், உயிர் என மொழிப - உயிரென்னும் குறியினையுடைய - என்று சொல்லுவர். (௮)

### பதினெண் மெய்

௯. னகார இறுவாய்ப்
பதினெண் எழுத்தும் மெய்யென மொழிப.

இது, மேற்கூறிய உயிரல்லா எழுத்திற்கும் ஓர் குறியிடுதல் நுதலிற்று.‡

---

* ,, முடிந்தது காட்டலென்னும் உத்தி. ஆணை கூறலுமாம். நொடியிற் கண்ணிமை சிறப்புடைத்து; உள்ளத்தான் நினைத்து நிகழாமையின்

† "ஆட்சியும் காரணமும் நோக்கியதோர் குறி. மெய் பதினெட்டினையும் இயக்கித் தான் அருவாய் வடிவின்றி நிற்றலின் உயிராயிற்று. இவை மெய்க்கு உயிராய் நின்று மெய்களை இயக்குமேல் உயிரென வேறோர் எழுத்தின்றாம் பிறவெனின், மெய்யினிற்கும் உயிரும் தனியே நிற்கும் உயிரும் வேறெனவுணர்க. என்னை? 'அகர முதல' (குறள் - ௧) என்புழி அகரந் தனியுயிருமாய்க் ககரமொற்று முதலியவற்றிற்கு உயிருமாய் வேறுநிற்றலின் அவ்வகரம் தனியே நிற்றலானும் பல மெய்கண் நின்று அவ்வம் மெய்கட்கு இசைந்த ஓசைகளைப் பயந்தே நிற்றலானும் வேறுபட்டதாகலின் ஒன்றேயாயும் பலவேயாயும் நிற்பதோர் தன்மையுடைத்தென்று கோடும்: இறைவன் ஒன்றேயாய் நிற்கும் தன்மையும் பல்லுயிர்க்கும் தானேயாய் அவற்றின் அளவாய் நிற்கும் தன்மையும்போல. அது அ என்ற வழியும் ஊடா என விளியேற்ற வழியும் 'அகர முதல' என்ற வழியும் மூவினங்களில் ஏறின வழியும் ஓசை வேறுபட்டவாற்றான் உணர்க." (நச்சி)

‡ இதுவும் ஆட்சியும் காரணமும் நோக்கிய குறி. என்னை? பன்னீருயிர்க்குந் தான் இடங்கொடுத்து அவற்றான் இயங்குந் தன்மை பெற்ற உடம்பாய் நிற்றலின். (நச்சி.)

(இ - ள்.) னகார இறுவாய்ப் பதினெண் எழுத்தும்-னகார மாகிய இறுதியையுடைய பதினெட்டு எழுத்தினையும், மெய் என மொழிப-மெய்யென்னும் குறியினையுடைய என்று சொல்லுவர். (கசு)

உயிர்மெய்க்கு அளபு

கO. மெய்யோ டியையினும் உயிரியல் திரியா.

இது, உயிர்மெய்க்கு அளபு கூறுதல் நுதலிற்று.

(இ - ள்.) மெய்யோடு இயையினும் - (உயிர்மெய்யாவன) மெய்களோடு உயிர் இயைப்பிறந்த நிலைமையவாயினும், உயிரியல் திரியா - (அவ்வுயிர்மெய்கள் அவ்வியைபின்கண்ணே வேறு ஓர் எழுத்தாய் நின்றமையின், மெய்யோடு இயைபின்றி நின்ற) உயிர்களது இயல்பில் திரியா.

உயிரும் மெய்யும் கூடுகின்ற உயிர்மெய்க்கூட்டத்தினை, 'மெய்யோ டியையினும்' என உயிர்மேல்வைத்துக் கூறியது, அவ்வுயிரின் மாத்திரையே இதற்கு மாத்திரையாகக் கூறுகின்றமை நோக்கிப்போலும். இயலென்றது பெரும்பான்மை மாத்திரையினை. சிறுபான்மை குறியும் எண்ணும் கொள்க. க எனவும், கா எனவும் அவ்வாறு நின்றமை அறிக. (கO)

தனிமெய்க்கு அளபு

கக. மெய்யின் அளபே அரையென மொழிப.

இது, தனிமெய்க்கு அளபு கூறுதல் நுதலிற்று.

(இ - ள்.) மெய்யின் அளபு - மெய்யது மாத்திரையினை, அரை என மொழிப - (ஒரோவொன்று) அரை மாத்திரையுடையவென்று சொல்லுவர்.

எ - டு: காக்கை, கோங்கு எனக் கண்டுகொள்க. ஈண்டு வேற்றுமை நயமின்றி ஒற்றுமைநயம் கருதப்பட்டது. (கக)

சார்பெழுத்துக்கு அளபு

கஉ. அவ்வியல் நிலையும் ஏனை மூன்றே.

இது, சார்பிற்றோற்றத்து எழுத்து மூன்றற்கும் அளபு கூறுதல் நுதலிற்று.

(இ - ள்.) அ இயல் நிலையும் -மேற்கூறிய அரை மாத்திரையாகிய அவ்வியல்பின்கண்ணே நிற்கும், ஏனைமூன்று - ஒழிந்த சார்பிற் றோற்றத்து மூன்றும்.

எ - டு: கேண்மியா, நாகு, எஃகு எனக் கண்டுகொள்க. (கஉ)

### மகரக்குறுக்கம்

கங. அரையளபு குறுகல் மகரம் உடைத்தே
இசையிடன் அருகுந் தெரியுங் காலை.

இது, மெய்களுள் ஒன்றற்கு மாத்திரைச் சுருக்கம் கூறுதல் நுதலிற்று.

(இ - ள்.) அரை அளபு குறுகல் மகரம் உடைத்து-அரையளபாகிய எல்லையிற் குறுகிக் கான்மாத்திரையாதலை மகர மெய் உடைத்து; (அஃது யாண்டோவெனின்) இசையிடன் அருகும் - வேறு ஓர் எழுத்தினது ஒலியின்கண் அது சிறுபான்மையாகி வரும், தெரியுங்காலை - ஆராயுங்காலத்து.

எ - டு : போன்ம், வரும்வண்ணக்கன் எனவரும். கான்மாத்திரையென்பது உரையிற்கோடல். (கங)

## ௩. வடிவு

### மகரத்தின் வடிவம்

கச. உட்பெறு புள்ளி உருவா கும்மே.

இது, பகரத்தின் மகரத்திடை வரிவடிவு வேற்றுமை செய்தல் நுதலிற்று.

(இ - ள்.) உள்பெறு புள்ளி உருவு ஆகும் - புறத்துப் பெறும் புள்ளியோடு உள்ளாற்பெறும் புள்ளி மகரத்திற்கு வடிவாம். (அஃதின்மை பகரத்திற்கு வடிவாம்.)

எ - டு : ம, ப எனக் கண்டுகொள்க. கப்பி கப்பி (கம்பி) என வரும். (கச)

### மெய்யெழுத்தின் இயல்பு

கரு. மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்.

இது, உயிர்மெய்யோடு தனிமெய்யிடை வடிவுவேற்றுமை செய்தல் நுதலிற்று.

(இ - ள்.) மெய்யின் இயற்கை - தனிமெய்யினது இயல்பு, புள்ளியொடு நிலையல் - புள்ளியொடு நிற்றல். (உயிர் மெய்யினது இயல்பு புள்ளியின்றி நிற்றல்)

க் ங் ச் ஞ் ட் ண் த் ந் ப் ம் ய் ர் ல் வ் ழ் ள் ற் ன் எனக் கண்டு கொள்க. (கரு)

### எகர ஒகரங்களின் இயல்பு

கசு. எகர ஒகரத் தியற்கையும் அற்றே.

இது, எகர ஒகரங்கட்கு ஏகார ஓகாரங்களோடு வேற்றுமை செய்தல் நுதலிற்று.

(இ - ள்.) எகர ஒகரத்து இயற்கையும் அற்று - எகர ஒகரங்களது இயல்பும் அவ்வாறு புள்ளிபெறும் இயல்பிற்று. (ஏகார ஓகாரங்களது இயல்பு அப்புள்ளி பெறா இயல்பிற்று.)

எ - டு : எ, ஒ. (கசு)

உயிர்மெய்யெழுத்தின் இயல்பு

கஎ. புள்ளி யில்லா எல்லா மெய்யும்
உருவுரு வாகி அகரமோ டுயிர்த்தலும்
ஏனை உயிரோ டுருவுதிரிந் துயிர்த்தலும்
ஆயீ ரியல உயிர்த்த லாறே.

இது, உயிரும் மெய்யும் கூடுமாறு உணர்த்தல் நுதலிற்று.

(இ - ள்.) எல்லா மெய்யும் புள்ளி இல்லா - எல்லா மெய்களும் புள்ளி இல்லையாம்படியாக, உருவு உருவு ஆகி - தத்தம் முன்னைவடிவே பின்னும் வடிவாக, அகரமோடு உயிர்த்தலும் - அகரத்தோடுகூடி ஒலித்தலும், ஏனை உயிரோடு உருவு திரிந்து உயிர்த்தலும் - ஒழிந்த உயிர்களோடு வடிவு வேறுபட்டு ஒலித்தலுமாகிய, ஆ ஈர் இயல-அவ்விரண்டு இயல்பினையுடைய, உயிர்த்தல் ஆறு - அவை ஒலிக்கு முறைமை.

"தன்னின முடித்தல்" என்பதனான், அளபெடை உயிரோடும் சார்பிற்றோற்றத்து உயிரோடும் கூடும் உயிர்மெய்யும் கொள்க.

எ - டு : உருவு உருவாகி உயிர்த்தல் க ங எனக் கண்டுகொள்க. உருவு திரிந்து உயிர்த்தல் கா ஙா எனக் கண்டுகொள்க.

ஈண்டு உயிரும் மெய்யும் கூடுகின்ற உயிர்மெய்க்கூட்டத்தினை, எல்லா மெய்யுமென்று மெய்மேல் வைத்துக் கூறியது, அது முன்கூறிக் கூறப்படுதல் நோக்கிப் போலும். உயிர்மெய் யென்பதனை, ஒற்றுமை கொள்வழி உம்மைத் தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை யெனவும், வேற்றுமைகொள்வழி உம்மைத்தொகையெனவும் கொள்க. 'இல்லாத' என்பது 'இல்லா' என நின்றது. உருவு திரிந்து உயிர்த்தல் மேலும் கீழும் விலங்குபெறுவன விலங்குபெற்று உயிர்த்தலும், கோடுபெறுவன கோடுபெற்று உயிர்த்தலும், புள்ளிபெறுவன புள்ளி பெற்று உயிர்த்தலும், புள்ளியும் கோடும் உடன்பெறுவன புள்ளியும் கோடும் உடன்பெற்று உயிர்த்தலும் எனக்கொள்க. (கஎ)

உயிர்மெய் ஒலிக்குமாறு

கஅ. மெய்யின் வழியது உயிர்தோன்றும் நிலையே.

இது, உயிர்மெய்யுள் உயிரும் மெய்யும் நிற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உயிர் - உயிர், மெய்யின் வழியது-மெய்களின் பின்னவாம், தோன்றும் நிலை - உயிர்கள் தோன்றும் நிலைமைக் கண்.

'தோன்று நிலை' என்றதனுன், உயிர்மெய்களைப் பிரிக்குமிடத்தும் கூட்டுமிடத்தும், அவ்வாமுறை முன்னும் பின்னும் ஆதலைக் கொள்க. மெய்யும் உயிரும் முன்னும் பின்னும் பெறநிற்குமென்றமையால், அக்கூட்டம் பாலும் நீரும்போல உடன்கலந்ததன்றி, விரல்நுனிகள் தலைப்பெய்தாற்போல வேறுநின்று கலந்தனவல்ல என்பது பெறுதும். ஈண்டு வேற்றுமைநயம் கருதப்பட்டது. (கஅ)

வல்லினமெய்

கக. வல்லெழுத் தென்ப க ச ட த ப ற.

இது, தனிமெய்களுள் சிலவற்றிற்கு வேறு ஓர் குறியிடுதல் நுதலிற்று.

(இ - ள்.) வல்லெழுத்து என்ப - வல்லெழுத்து என்னும் குறிய என்று சொல்லுவர், க ச ட த ப ற - க ச ட த ப ற என்னும் தனிமெய்களை.

வல்லென்று இசைத்தலானும், வல் என்ற தலைவளியாற் பிறத்தலானும் வல்லெழுத்து எனப்பட்டது. மொழிக்கு முதலாமெழுத்து நான்கு உளவாகலானும், அவற்றால் வழக்குப்பயிற்சி பெரிதாகலானும் (வல்லினம்) முன்கூறப்பட்டது. (கக)

மெல்லினமெய்

உ௦. மெல்லெழுத் தென்ப ங ஞ ண ந ம ன.

இதுவும் அது.

(இ - ள்.) மெல்லெழுத்து என்ப-மெல்லெழுத்து என்னும் குறிய என்று சொல்லுவர், ங ஞ ண ந ம ன - ங ஞ ண ந ம ன என்னும் தனிமெய்களை.

மெல்லென்று இசைத்தலானும், மெல் என்ற மூக்கின்வளியாற் பிறத்தலானும், மெல்லெழுத்து எனப்பட்டன. மொழிக்கு முதலாமெழுத்து மூன்று உளவாகலானும் அவற்றின் வழக்குப்பயிற்சியானும் (மெல்லினம்), முதலாமெழுத்துச் சிறுபான்மை வழக்கினவாய் இரண்டாகிய இடையினத்தின்முன் வைக்கப்பட்டது. வன்மை மென்மை கூறலின், எழுத்து அருவன்றி உருவாதல் பெறப்பட்டது. உயிருக்கும் குறுமை நெடுமை கூறலின், உருவென்பது பெறுதும். (உ௦)

இடையினமெய்

உக. இடையெழுத் தென்ப ய ர ல வ ழ ள.

இதுவும் அது.

(இ - ள்.) இடையெழுத்து என்ப - இடையெழுத்து என்னும் குறியவென்று சொல்லுவர், ய ர ல வ ழ ள - ய ர ல வ ழ ள என்னும் தனிமெய்களே.

இடைநிகரவாகி ஒலித்தலானும், இடைநிகர்த்தாய மிடற்றுவளியாற் பிறத்தலானும் இடையெழுத்து எனப்பட்டது. (உக)

## ரு. மயக்கம்

### மெய் மயங்குமாறு

உஉ. அம்மூ வாறும் வழங்கியன் மருங்கின்
மெய்ம்மயங் குடனிலை தெரியுங் காலை.

இது, தனிமெய்ம் மயக்கத்திற்குப் பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அ மூ ஆறும் - மேற்சொல்லப்பட்ட (மூவாறு) பதினெட்டு மெய்யும், வழங்கு இயல் மருங்கின் - தம்மை மொழிப்படுத்தி வழங்குதல் உளதாமிடத்து, மெய் மயங்கு - மெய்ம் மயக்கம் என்றும், உடன்நிலை - உடனிலை மயக்கம் என்றும் இருவகைய, தெரியும் காலை - (அவை மயங்கு முறைமை) ஆராயும் காலத்து.

உயிர், மெய், உயிர்மெய் என்னும் மூன்றனையும் உறழ்ச்சிவகையான் உறழ ஒன்பது உளவாமன்றே, அவற்றுள் தனிமெய்யோடு தனிமெய்ம் மயக்கம் ஒன்றே கூறிய தென்னெனின், மற்றவற்றிற்கு வரையறை யின்மையின், வரையறையுடைய தனிமெய்ம்மயக்கமே கூறியொழிந்தார் என உணர்க. மெய் என்றதனால், தனிமெய்யோடு உயிர்மெய்ம் மயக்கமன்றி, தனிமெய்யோடு தனிமெய்ம் மயக்கமாதல் கொள்க. (உஉ)

### தனிமெய் பிற மெய்யுடன் மயங்குமாறு

உரு. டறலள வென்னும் புள்ளி முன்னர்க்
கசப வென்னு மூவெழுத் துரிய.

இது, மெய்மயக்கம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) டறலள என்னும் புள்ளி முன்னர் - ட ற ல ள என்று சொல்லப்படும் புள்ளிகளின் முன்னர், க ச ப என்னும் மூ எழுத்து உரிய - க ச ப என்று சொல்லப்படும் மூன்றெழுத்தும் மயங்குதற்கு உரிய.

எ - டு : கட்க, கற்க, செல்க, கொள்க எனவும்; கட்சிறார், கற்சிறார், செல்சிறார், கொள்சிறார் எனவும்; கட்ப, கற்ப, செல்ப, கொள்ப எனவும் வரும்.

மேல் 'தெரியுங்காலை' என்றதனன், இம்மெய்ம்மயக்கம் கூறுகின்ற சூத்திர மெல்லாம் பலபடியால் மயக்கம் கொள்ளச் சொல்நோக்கு உடையவெனினும், வழக்கினேடு பொருந்த ஒன்றனேடு ஒன்றன்றி மயங்காதென்பது கொள்க. மெய்ம்மயக்கம் ஒருமொழிக்கும் புணர்மொழிக்கும் பொதுவாகலின், மேற் கூறும் புணர்மொழிச் செய்கையெல்லாம் தலையாய அறிவினேரை நோக்க ஒருவாற்ருற் கூறியவாருயிற்று. (உ௩)

உ௪. அவற்றுள்
லளஃகான் முன்னர் ய வ வுந் தோன்றும்.

இதுவும் அது.*

(இ - ள்.) அவற்றுள்-மேற்கூறிய நான்கனுள்ளும், லளஃகான் முன்னர்-லகார ளகாரங்களின் முன்னர், ய வவும் தோன்றும்-க ச பக்களேயன்றி யகர வகரங்களும் தோன்றி மயங்கும்.

எ - டு: கொல்யானை, வெள்யானை, கோல்வளை, வெள்வளை என வரும். (உ௪)

உ௫. ஙஞண நமன வெனும்புள்ளி முன்னர்த்
தத்தம் மிசைகள் ஒத்தன நிலையே.

இதுவும் அது.

(இ - ள்.) ஙஞண நமன எனும் புள்ளிமுன்னர்-ஙஞண நமன என்று சொல்லப்படும் புள்ளிகளின் முன்னர், தத்தம் மிசைகள் ஒத்தன - (நெடுங்கணக்கினுள்) தத்தமக்கு மேல் நிற்கும் எழுத்தாகிய க ச ட த ப ற க்கள் பொருந்தின, நிலை-மயங்கி நிற்றற்கண்.

எ - டு: தெங்கு, மஞ்சு, வண்டு, பந்து, கம்பு, கன்று என வரும். (உ௫)

* இவற்றுட் கொல்யானை என வினைத்தொகையும் வெள்யாறு எனப் பண்புத்தொகையும் நிலைமொழி வருமொழி செய்வதற்கு இயையாமையின், 'மருவின் பாத்திய' என்று கூறுவராதலின், இவ்வாசிரியர் இவற்றை ஒரு மொழியாகக் கொள்வரொன்று உணர்க. இக்கருத்தானே மேலும் வினைத்தொகையும் பண்புத்தொகையும் ஒருமொழியாகக் கொண்டு உதாரணம் காட்டுதும். அன்றி இவ்வாசிரியர் நூல் செய்கின்ற காலத்து வினைத்தொகைக்கண்ணும் பண்புத்தொகைக்கண்ணும் அன்றி ஒரு மொழிக்கண்ணே மயங்குவனவும் உளவாதலின், அவற்றைக்கண்டு இலக்கணம் கூறினர். அவை பின்னர் இறந்தனவென்று ஒழித்து உதாரணமில்லனவற்றிற்கு உதாரணங் காட்டாமற் போதலே நன்றென்று கூறுதும் ஒன்று. (நச்.)

உசு. அவற்றுள்
ணனஃகான் முன்னர்க்
க ச ஞ ப ம ய வவ் வேழு முரிய.

இதுவும் அது.

(இ - ள்.) அவற்றுள் - மேற்கூறப்பட்ட மெல்லெழுத்து ஆறனுள், ணனஃகான் முன்னர் - ணகார னகாரங்களின் முன்னர், க ச ஞ ப ம ய வ ஏழும் உரிய - (டறக்களே யன்றி) க ச ஞ ப ம ய வ என்று சொல்லப்படும் ஏழும் மயங்குதற்கு உரிய.

எ - டு: வெண்கலம், புன்கண், வெண்சாந்து, புன்செய், வெண் ஞாண், பொன்ஞாண், வெண்பலி, பொன்பெரிது, வெண்மாலே, பொன் மாலே, மண்யாது, பொன்யாது, மண்வலிது, பொன்வலிது என வரும். (உசு)

உஎ. ஞ ந ம வ வென்னும் புள்ளி முன்னர்
யஃகான் நிற்றல் மெய்பெற் றன்றே.

இதுவும் அது.

(இ - ள்.) ஞ ந ம வ என்னும் புள்ளி முன்னர் - ஞ ந ம வ என்று சொல்லப்படுகின்ற புள்ளிகளின் முன்னர், யஃகான் நிற்றல் மெய்பெற்றன்று - யகரம் மயங்கி நிற்றல் பொருண்மை பெற்றது.

எ - டு: உரிஞ்யாது, பொருந்யாது, திரும்யாது, தெவ்யாது, எனவரும். (உஎ)

உஅ. மஃகான் புள்ளிமுன் வவ்வுந் தோன்றும்.

இதுவும் அது.

(இ - ள்.) மஃகான் புள்ளிமுன் - மகரமாகிய புள்ளி முன்னர், வஉம் தோன்றும்-(பகர யகரங்களேயன்றி) வகாரமும் தோன்றி மயங்கும்.

எ - டு: நிலம்வலிது எனவரும். (உஅ)

உகூ. ய ர ழ வென்னும் புள்ளி முன்னர்
முதலா கெழுத்து ஙகரமொடு தோன்றும்.

இதுவும் அது.

(இ - ள்.) ய ர ழ என்னும் புள்ளி முன்னர் - ய ர ழ என்று சொல்லப்படுகின்ற புள்ளிகளின் முன்னர், முதல் ஆகு எழுத்து ஙகரமொடு தோன்றும் - மொழிக்கு முதல் ஆம்

என்னப்பட்ட ஒன்பதுமெய்யும் (முதலாக) யகரத்தோடு தோன்றி மயங்கும்.

எ - டு : வேய்கடிது, வேர்கடிது, வீழ்கடிது, சிறிது, தீது, பெரிது; ஞான்றது, நீண்டது, மாண்டது, யாது, வலிது எனவரும். வேய்ஙனம், வேர்ஙனம், வீழ்ஙனம் எனவும் ஒட்டுக. வேய்யாது என்புழி, உடனிலையாதலான் யகரம் ஒழித்து ஒட்டுக. (உக)

தனிமெய் தன் மெய்யோடு மயங்குமாறு

ங.௦. மெய்ந்நிலை சுட்டின் எல்லா வெழுத்தும்
தம்முன் தாம்வருஉம் ர ழ அலங் கடையே.

இது, நிறுத்த முறையானே உடனிலைமயக்கம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மெய்ந்நிலை சுட்டின்-பொருள்நிலைமைக் கருத்தின் கண், எல்லா எழுத்தும் தம்முன் தாம் வரும்-எல்லா மெய் யெழுத்தும் தம்முன்னே தாம் வந்து மயங்கும், ர ழ அலங் கடை-ரகார ழகாரங்கள் அல்லாத இடத்து.

எ - டு : காக்கை, எங்ஙனம், பச்சை, மஞ்ஞை, பட்டை, மண்ணை, தத்தை, வெந்நோய், அப்பை, அம்மி, வெய்யர், எல்லி, எவ்வி, கொள்ளி கொற்றி, கன்னி என வரும், 'மெய்ந்நிலை சுட்டின்' என்றதனால், 'தம் முன் தாம் வரும்' என்றது, மெய்ம்முன்னர் மெய்யெனினும் மாத்திரை யன்றி, உடனிலைமெய் மேலதாம் என்பதுகொள்க. 'எல்லாம்' என்றது, மேல் ய ர ழ என்ற அதிகாரம் மாற்றிவந்து நின்றது. (ங௦)

எழுத்துக்களின் பிற மரபுகள் சுட்டெழுத்துக்கள்

ஙக. அ இ உ அம்மூன்றுஞ் சுட்டு.

(இ - ள்.) அ இ உ அ மூன்றும் சுட்டு - (குற்றெழுத்து என்னப்பட்ட) அ இ உ என்னும் அம்மூன்றும் சுட்டு என்னும் குறியவாம்.

எ - டு : அங்ஙனம், இங்ஙனம் உங்ஙனம் என வரும்.

வினா வெழுத்துக்கள்

ஙஉ. ஆ எ ஓ அம் மூன்றும் வினா.

(இ - ள்.) ஆ எ ஓ அ மூன்றும் வினா - (மேல் நெட்டெழுத்து என்னப்பட்ட) ஆ எ ஓ என்னும் அம் மூன்றும் வினா என்னும் குறியவாம்.

எ - டு : உண்கா, உண்கே, உண்கோ, சாத்தா எனவரும்.

*“தன்னின முடித்தல்”* என்பதனால், எகாரமும் யகர ஆகாரமும் வினைப் பெறுமெனக் கொள்க. இக்குறிகளையும் முன் குறிலென்றும் நெடிலென்றும் கூறியவழியே கூறுகவெனின், இவை சொல் நிலைமையிற் பெறும் குறியாகலின், ஆண்டு வையாது மொழிமரபினைச் சார வைத்தார் என்க. இக்குறி மொழிநிலைமைக்கேல் எழுத்தின்மேல் வைத்துக்கூறியது என்னையெனின், இவ்வதிகாரத்துப் பெயர் வினையல்லனவற்றிற்குக் கருவிசெய்யாமையின் என்க. (௩௨)

### இசை நூன்முறையில் எழுத்தொலிகள்

௩௩. அளபிறந் துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்
உளவென மொழிப இசையொடு சிவணிய*
நரம்பின் மறைய என்மனார் புலவர்.

இது, எழுத்துக்கள் முற்கூறிய மாத்திரையின் நீண்டு நிற்கும் இடம் இது வென்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) *அளபு இறந்து உயிர்த்தலும்* - (உயிரெழுத்துக்களெல்லாம்) தமக்குச் சொன்ன அளவினைக் கடந்து ஒலித்தலையும், *ஒற்று இசை நீடலும்* - ஒற்றெழுத்துக்கள் தம் மொலி முன்கூறிய அளபின் நீடலையும், *இசையொடு சிவணிய நரம்பின் மறைய* - (இந்நூலுட்கூறும் விளியின் கண்ணேயன்றிக்) குரல்முதலிய ஏழிசையோடு பொருந்திய நரம்பினையுடைய யாழினது இசைநூற் கண்ணும், *உள எனமொழிப என்மனார் புலவர்* - உள எனச்சொல்லுவர் அவ்விசை நூலாசிரியர் என்று சொல்லுவர் புலவர்.

ஒற்றிசை நீடலும் என்றனர், அளபிறந்துயிர்த்த லென்றது அதிகாரத்தால் நின்ற உயிர்மேற்சேறலின். உள வென்றது அந்நீட்டிப்பு ஒருதலையன் றென்பது விளக்கிற்று. இசைநூலாசிரியரும் முதனூலாசிரியர் தாமேயெனினும், ‘மொழிப,’ எனவேறொருவர் போலக்கூறியது, அதுவும் வேறுஒரு நூலாகச் செய்யப்படும் நிலைமைநோக்கிப் போலும். ‘மறையும்’ என்பதன் உம்மை விகாரத்தால் தொக்கது. அகரம் செய்யுள் விகாரம். (௩௩)

முதலாவது நூன்மரபு முற்றிற்று.

---

*சிவணிய என்பது தொழிற் பெயர். இசையொடு சிவணிய எனவே செய்யுளாதல் பெற்றும். நரம்பு என்றது ஆகுபெயராய் யாழினை உணர்த்திற்று. மறை என்றது நூலை. மொழிப என்றும் என மனார் புலவர் என்றும் இருகாற் கூறியவதனால், இங்ஙனம் பொருள் கூறலே ஆசிரியர்க்குக் கருத்தாயிற்று. என்னை? செய்யுளியலுட் கூறிய ‘மாத்திரையளவும்’ என்னும் சூத்திரத்தில் ‘மேற்கிளந்தன்ன’ (செய்-௨) என்னும் மாட்டேற்றிற்கு இவ்வோத்தினுள் வேறோர் சூத்திரம் இன்மையின் இவ்விலக்கணம் கூறுக்காற் செய்யுட்குப் பாவென்னும் உறுப்பு நிகழாது. அவை உரைச்செய்யுட் போல நிற்றலின் இவ்விலக்கணம் கூறவே வேண்டுமென்று உணர்க. (நச்.)

# உ. மொழிமரபு

இவ்வோத்து என்ன பெயர்த்தோ வெனின், *மொழிகளுக்கு எழுத்தான் வரும் மரபு உணர்த்தினமையின் மொழிமரபு எனப் பட்டது. இதனுள் கூறுகின்றது தனிநின்ற எழுத்திற்கு அன்றி மொழியிடை (நின்ற) எழுத்திற்கு எனவுணர்க.

[மொழிக்கண் நின்ற எழுத்தின் இலக்கணம் உணர்த்துவது]

## க. சார்பெழுத்துக்கள் மொழிகளிற் பயிலுமாறு

குற்றியலிகரத்திற்கு இடனும் பற்றுக்கோடும்

௩௪. குற்றிய லிகரம் நிற்றல் வேண்டும்
யாவென் சினைமிசை உரையசைக் கிளவிக்கு
ஆவயின் வரூஉம் மகரம் ஊர்ந்தே.

இத்தலைச்சூத்திரம் என் நுதலிற்றோ வெனின், சார்பின் தோற்றத்து எழுத்துக்களிற் குற்றியலிகரத்தில் ஒருமொழிக்குற்றியலிகரத்திற்கு இடமும் பற்றுக்கோடும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) குற்றியலிகரம் - ஒருமொழிக் குற்றியலிகரம், உரையசைக் கிளவிக்கு - உரையசைச் சொல்லாகிய மியா என்முதற்கு, ஆ வயின் வரூஉம் - (சினையாக) அச்சொல் தன்னிடத்து வருகின்ற, யா என் சினைமிசை - யா என் சினைமிசை, மகரம் ஊர்ந்து நிற்றல்வேண்டும்-மகர ஒற்றினை ஊர்ந்து நிற்றலை வேண்டும் (ஆசிரியன்).

எ - டு: கேண்மியா எனவரும். மியா என்னும்சொல் இடம். மகரம் பற்றுக்கோடு. யா என்னும் சினையும் மகரம்போலக் குறுகு தற்கு ஒரு சார்பு. (க)

௩௫. புணரியல் நிலையிடைக் குறுகலும் உரித்தே
உணரக் கூறின் முன்னர்த் தோன்றும்.

---

* "குற்றிய லிகரம் நிற்றல் வேண்டும்" என்பதுமுதல் "உருவினும் இசையினும்" என்னும் சூத்திரம் காறும், அவைதாம், என்பதன் ஒழிபு. "குன்றிசை" "ஐ ஔ" இரண்டும் "நீட்டம் என்பதன் ஒழிபு" "நெட்டெழுத் தேழே" என்பது "அவற்றுள் அ இ உ எ" "ஆ ஈ ஊ ஏ" என்பவற்றின் ஒழிபு, மொழியாக்கம் அதிகாரப்பட்டமையின் ஓரெழுத்தொருமொழி என்பதும் உடன் கூறினார். "மெய்யின் இயக்கம்" என்பது "னகர இறுவாய்" என்பதன் ஒழிபு, "தம்மியல் கிளப்பின்" என்பது முதல் "மகரத் தொடர்மொழி" என்னும் சூத்திரம் காறும் மயக்கச் சூத்திர ஒழிபு என விதந்து நூன்மரபின் ஒழிபே மொழிமரபு என்றது தொல்காப்பியச் சூத்திரவிருத்தி.

